5. ஓ மஹாதேவியே! நன்று, நன்று, எல்லா உலகங்களுக்கும் நன்மையானது (உன்னுல்) கேட்கப்பட்டது. முன்னெரு காலம் ஸ்ரீமானும் உலகரக்ஷணையை யே கைக்கொண்டவனுமான நாராயணன் (திருமால்),

6. அம்பிகையோடு கூடினவனும் மங்களரூபியுமான எம்மை (ஸோமாஸ்கந்த மூர்த்தியை) வெகு காலம் பாற்கடலில் அசைவற்ற மனத்தோடு அதிலிருந்து நழுவாமல் தியானித்திருந்தனன்.

7. (அச்சுதனுடைய) தவத்தினால் களிப்புற்ற நாம் கருணையோடு அவன்முன் தோன்றினோம். (பிறகு) அத்தியானத்தினின்றும் விழித்துக் கொண்ட மஹா விஷ்ணு லக்ஷ்மியோடு கூட எம்மை நன்கு பூசித்தனன்.

8. வேத வேதாந்த ஸம்ஹிதைகளில் கூறப்பட்டுள்ள பற்பல துதிகளால் போற்றினன். "ஓ குழந்தாய்! உனது மனதில் யாது வரம் இஷ்டம் உளதோ அதனைக் கேட்பாயாக.

9. அதைச் சீக்கீரம் அளிக்கிறேன்" என்று (எம்மால்) கூறப்பட்ட அத்தாமரைக்கண் ணன் மிகுந்த பக்தியோடு எம்மைக் குறித்துக் கேட்கலாயினன். 'ஓ ப்ரபோ! எனது இஷ்டத்தைக் கொடுப்பீராயின்.

10. உலகை ரக்ஷிப்பதற்கும், அசுரர்களை சிக்ஷிப்பதற்கும் எல்லாமாக இருக்கும் யோகத்தை அடைவதற்கும் ஒரு மந்திரத்தை உபதேசம் செய்தருளுவீராக" (என்று அத்திருமால் விண்ணப்பித்தனன்)

11. இவ்விதம் அந்த மாதவனுல் நன்கு பிரார்த்திக்கப்பட்ட நாம்,, "ஓ அம்பிகையே! ஒப்புயர்வற்றதும், அவரவர் இஷ்டங்களை அளிப்பதுமான

12. ஸ்ரீ நடராஜராஜரின் ஆயிரம் திருநாமங்கள் அமைந்த தோத்திரத்தை அந்த விஷ்ணுவுக்கு உபதேசித்தோம். அத்துதியின் பாராயணத்தால் எல்லா அசுரர்க ளையும் ஜயித்து ஸகல உலகங்களையும் காப்பாற்றினன்.

13. எல்லாமாயிருக்கும் யோக ஸித்தியையும் அக்கமலக் கண்ணன் அடைந்தனன். ஓ, அம்பிகையே அவ்வாயிரம் நாமங்களுள்ள துதியை நீ கேட்க விரும்புகிறுய்!

14. (எந்த ஒரு தோத்திரத்தை) படிப்பதனுலும் நினைப்பதனுலும் பிரபுவான பரமன் தனது நர்த்தனத்தைக் காண்பிக்கின்றுரோ, மனிதர்கட்கு ஸர்வபாபங்களை அகற்றுவதும் புண்ணியத்தை அளிப்பதும், ஸர்வ ரக்ஷையைக் கொடுப்பதும்,

15. ஸர்வைச்வர்யங்களையும் அளிப்பதும், ஸர்வஸித்திகளை உண்டு பண்ணுவதும், முத்தியின்பத்தைச் சேர்ப்பிப்பதும் நனி சிறந்ததுமான (ஸ்ரீ நடரா

ஜராஜரின் அவ்வாயிரம் திருநாமங்கள் உள்ள) தோத்திரத்தைச் சொல்லுகி றேன். ஓதேவீ! கேட்பாயாக".

என்றிவ்வாறு பூர்வபீடிகை முற்றிற்று.

(பின் குறிப்பு) இப்பூர்வபீடிகையின் ஆக்ஷேப ஸமாதானத்தோடு கூடிய ரஹ ஸ்யமான அர்த்தங்கள் பல "சிந்தாமணி" என்னும் பெயரிய வடமொழிப் பேருரை யில் உள்ளன. அப்பேருரையும் தமிழ் விளக்கத்துடன் வெகு விரைவில் வெளி வர கூத்தப் பெருமானுடைய அருளை விரும்புகிறோம்.

# ஸ்ரீ நடேச ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமாலா மஹாமந்த்ர ஜப ந்யாஸ முறைகள்.

இந்த நடேச்வர ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர மாலா மஹா மந்திரத்துக்கு **ரிஷி ஸதாசிவன்** (சிரஸில் கை வைக்கவும்) மந்திரங்களைக் கண்டு பிடித்த ரிஷிகளுக்கு மரியாதை செலுத்துவது இது. **சந்தஸ் மஹா விராட்** என்பதாகும். (முகத்தைத் தொடவும்) சந்தஸ் என்பது எத்தனை எழுத்துக்கள் என்று தெரிவிப்பதாகும். எழுத்துக் கள் எல்லாம் வாயிலிருந்தே வருவதால் அந்த இடத்தில் தொட வேணும். **தேவதை நடேச்வரன்** ஆவார். அதாவது இந்த மந்திரத்தால் துதிக்கப் படுபவர் ஸ்ரீ நடேச்வரர் என்பதாம். (ஹ்ருதயத்தைத் தொடவும்) ஹ்ருதயத்தில் இறைவர் வீற்றிருக்கிறார் என்பதன் அறிகுறி இது.

**ஓம் ஸ்ரீசிவாய நம:** பீஜம் - மார்பில் வலப்பக்கம் வலது கையால் தொட வேண்டும்.

**ஓம் அனந்த சக்தயே நம:** சக்தி: மார்பு இடப்பக்கம் தொடவும்.

**ஓம் ஸ்ரீ மஹேச்வராய நம:** கீலகம் - மார்பு நடுவில் தொடவும்.

(ஸ்ரீ நடேச்வர மந்திர ஜபத்திலோ அல்லது ஜபிப்பவர்களிடமோ குற்றமிருந் தாலும் தடைகள் ஏற்பட்டாலும் மேற்படி மூன்றும் நீக்கிவிடும்)

ஸ்ரீ நடேச்வரப் பெருமானின் பிரஸாத சித்தியின் பொருட்டு ஜபம் (அர்ச்சனை) என்பது விநியோகம்.

## கரந்யாஸ அங்கந்யாஸங்கள்

ந்யாஸம் என்பது உடலின் பல பாகங்களைத் தொடுவது. கடவுளின் மந்திரங்களைச் சொல்லி சரீரத்தில் ந்யாஸம் செய்தால் நமது உடல் அவர் குடியிரு க்கும் கோயிலாகிவிடும், பிறகு ஜபம் செய்தால் அருள் விரைவில் கிடைக்கும்.

**ஓம் நம்யாய நம:** - அங்குஷ்டாட்யாம் நம: - கட்டை விரலைத் தொடவும் - வணங்கத்தக்கவர் கட்டை விரலில் இருக்கட்டும்.

**ஓம் ஸ்வாஹா நம:** - தர்ஜனீப்யாம் ஸ்வாஹா - ஆள்காட்டி விரலைத் தொடவும். - ஹோமங்களில் நாம் கொடுக்கும் திரவியங்களை வாங்கிக்கொள்பவர் ஆள்காட்டி விரலில் இருக்கட்டும்.

**ஓம் வஷட்காராய நம:** - மத்யமாப்யாம் வஷட் - நடுவிரலைத் தொடவும் - உச்சரிக்கப்படும் வேதமாயிருப்பவர் நடு விரலில் இருக்கட்டும்.

**ஓம் ஹூம்காராய நம:** - அநாமிகாப்யாம்ஹூம் - மோதிர விரலைத் தொடவும் இதயாகாசத்தில் வீற்றிருப்பவர் மோதிரவிரலில் இருக்கட்டும்.

**ஓம் வௌஷட்காராய நம:** - கனிஷ்டிகாப்யாம் வௌஷட் - சுண்டு விரலைத் தொடவும் - கடவுளை அழைக்கும் மத்திரமாயிருப்பவர் சுண்டு விரலில் இருக்கட்டும்.

**ஓம் பட்கராய நம:** - கரதலகரப்ருஷ்டாப்யாம் பட் - உள்ளங்கை புறங்கை இரண்டையும் தொடவும். ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுதல்.

**ஓம் நம்யாய நம:** - ஹ்ருதயாய நம : - மார்பில் தொடவும் - ஹ்ருதயத்தில் இருக்க வேண்டுதல்.

**ஓம் ஸ்வாஹா நம:** சிரஸே ஸ்வாஹா - தலை முன் பக்கம் தொடவும். தலை வணங்கிக் கொடுத்தல்.

**ஓம் வஷட்காராய நம:** - சிகாயை வஷட் - தலையின் பின் புறம் தொடவும் - பின் புறம் மறைந்திருப்பவரை வேண்டுதல்.

**ஓம் ஹூம்காராய நம:** - கவசாய ஹூம் - இரண்டு தோள் பட்டைகளையும் தொடவும் - தோள்களில் இருக்க வேண்டுவது.

**ஓம் வௌஷட்காராய நம:** - நேத்ரத்ரயாய வௌஷட் - இரண்டு கண்களையும் புருவ நடுவையும் மூன்று விரல்களால் தொடுவது. முக்கண்ணனை வேண்டுதல்.

ஓம் பட்கராய நம: - அஸ்த்ராய பட் - வலது கை விரலால் இடது கையில் தட்டவும்.

**பூர்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த:** - மூவுலகத்திலும் உள்ளவரான பெருமான் ஜபம் முடியும் வரை என் உள்ளத்தில் வீற்றிருக்க வேண்டும்.

(**பதிப்பாசிரியர் குறிப்பு**: ந்யாஸம் இல்லாமல் செய்யப்படும் மந்திரப் பிரயோ கங்கள் பயன் அளிக்காது என்று மந்திரநூல் கூறும் என உரையாசிரியர் குறிப்பிட்டு ள்ளதால் ந்யாஸ முறைகளையும் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளோம். மேலும்

ஐயங்கள் ஏற்படின் மந்திர சாஸ்திர வல்லுனர்களையண்டி நன்கு தெரிந்து கொண்டு செய்யவும்)

# தியான சுலோகங்களின் பொருள் விளக்கம்

தியான சுலோகங்கள் பல. அவற்றுள் சிறந்தவை மூன்று. அவற்றின் கருத்து வருமாறு.

1. கோடி சூரிய காந்தி, முக்கண், சந்திரன், கங்கை இவைகளைக் கொண்ட திருமுடி; வலதுகாலை ஊன்றி இடது காலைச் சிறிது தூக்கி வளைத்து நீட்டி, புலித்தோல் ஆடையணிந்து, அங்கி, நீட்டல் (வீசிய - டோளம்) அபயம், உடுக்கை இவைகளைக் கொண்டதும், இடப்பாகத்தில் (ஒரே பீடத்தில் தனிமையாக) மங்களத் தைப் புரிகின்ற பச்சை நிற மேனியாள்;

i. நீலோத்பலம் உடைய வலக்கை, தொங்க விட்ட இடக்கை ஆகியவற்றை யுடைய அம்பிகை.

ii. (மற்றொரு உருவம்) வலது கைகள் இரண்டில் செப மாலையும் நீலோத் பலமும்; இடது கைகள் இரண்டில் ஒன்றில் கிளியும் மற்றொன்று தொடையின் மேல் வைத்ததும் ஆகிய நான்கு திருக்கரங்கள் உடையவளைத் தியானம் செய்க. இதில் பெருமானின் இடது பாகத்தில் அம்மை இரண்டு அல்லது நான்கு திருக்கைகள் உடையவளாகத் தனித்தனியே கூறப்படுகிறது. அம்மையும் அப்பனும் ஓர் உருவ மாக இருப்பதை ஸம்மேளன சபா நடன மூர்த்தி என்பர். சிதம்பர யந்திரத்தில் இம் முறைப்படி அம்மையும் அப்பனும் தனித் தனியாகவும் மாதிருக்கும்பாதியனுகவும் வரைதல் கூறப்படுகிறது.

2. 1) தொடையில் வைத்தகை 2) நீட்டியகை 3) எரி ஏந்திய கை 4) கிளி ஏந்தியகை ஆகிய இடது கைகள் நான்கும் 1) உடுக்கை 2) செபமாலை 3) நீலோத்பலம் 4) அபயம் ஆகிய வலதுகைகள் நான்கும்; இடதுகாலைச் சிறிது தூக்கி வளைத்தும், வலதுகாலைப் பூதத்தின் மேல் ஊன்றியும், திரு மேனியில் செம்பாதி அம்மையின் திருவுருவமும், பாதி ஆடை பின்னல்சடை, நெற்றிக்கண், குசம் ஆகிய இவை ஒன்று சேர்ந்த அம் மையப்பன் வடிவத்தைத் தியானம் செய்க.

3. மோஹம் விளைவிக்கின்ற பூதத்தின் மேல் ஊன்றிய திருவடியும், செந்நிற ஆடையுடுத்து, (எப்போதும்) உலகுக்கு மங்களத்தைச் செய்கின்றதும், சிறிது தூக்கி வளைத்த இடது திருவடியும் இடது பக்கம் கரும்பு வில், பாசம், அங்கி, வீசிய (நீட்டிய - டோளம்) கைகளும்; வலது பக்கம் அபயம், மலர் அம்பு, அங்குசம், உடுக்கை ஆகிய இவைகளை எட்டு திருக்கைகளில் கொண்ட தூய ஸ்ரீ நடராஜ வடிவ ஜோதியை தியானம் செய்க.

சுலோகம் 2ம், 3ம் சிவகாமசுந்தரி திரிபுரசுந்தரி உருவங்கள் இறைவனுடன் ஒன்றுபட்ட நிலையைக் கூறுகின்றன. இரண்டு திருக்கைகளுடன் கூடிய அம்மையின் தியான வடிவங்கள் வேறுபாடுகளுடன் மேலும் பலவுள

**பதிப்பாசிரியர் குறிப்பு:** தியான சுலோகங்களின் பொருள் விளக்கம் உரை யாசிரியர் பிரம்மஸ்ரீ க. மீ. ராஜகணேச தீக்ஷிதரவர்களால் தொகுக்கப்பட்டு கிரந்த எழுத்துக்களில் வெளியிடப்பட்ட ஸ்ரீ நடேச ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர நூலின் முகவுரைப் பகுதியில் உள்ளபடி இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

## பஞ்சோபசாரங்கள்

**லம்** - ப்ருதிவ்யாத்மனே - கந்தான் தாரயாமி - கட்டை விரலைத் தொடவும்.

**ஹம்** - ஆகாசாத்மனே - புஷ்பாணி ஸமர்ப்பயாமி - ஆள் காட்டி விரலைத் தொடவும்.

**யம்** - வாயுவாத்மனே - தூபமாக்ராபயாமி - நடுவிரலைத் தொடவும்.

**ரம்** - வன்னியாத்மனே - தீபம் தர்சயாமி - மோதிரவிரலைத் தொடவும்.

**வம்** - அம்ருதாத்மனே - அம்ருதநிவேதனம் நிவேதயாமி - சுண்டு விரலைத் தொடவும்.

**ஸம்** - ஸர்வாத்மனே - ஸர்வோபசாரான் ஸமர்ப்பயாமி இரண்டு கைகளையும் கூப்புதல்.

**குறிப்பு:** - ஈச்வரன் அஷ்டமூர்த்தி 1. ப்ருத்வி (பூமி) 2. ஆகாயம் 3. வாயு 4. வன்னி (தீ) 5. நீர் (அம்ருதம்) 6. சூரியன் 7. சந்திரன் 8. யஜமானன். இவற்றுள் பஞ்ச பூதங்கள் எனப்படும் முதல் ஐந்தும் முக்கியமானவை. இந்த ஐம்பெரும் பூதங்களிலும் ஈசன் நிறைந்திருக்கின்றான். நமது இதயத்தில் நிறுத்திய ஈசனை மனதால் வழிபட இம்முறையைக் கையாண்டால் ஐம்பூத வடிவனாயும் அஷ்டமூர்த்தியுமான அப்பெருமானது அருள் விரைவில் கிடைக்கும். இதுவே “லமித்யாதி” பஞ்சோபசாரங்களின் தத்வம்.

## இனி ஸ்ரீ நடராஜரின் ஆயிரம் திருநாமங்களின் சுருக்கமான பொருள் கூறப்படுகிறது.

(நாமாக்கள் முதல்வேற்றுமையால் கூறப்படுவதால் அவ்விதமே சொற்களைப் பிரித்துப் பொருள்களும் எழுதப்படுகின்றன. பரமனைப் பூசிக்கும் காலத்திலும், போற்றும் காலத்திலும் வேள்வியிலும் அவற்றுக்குரிய வேற்றுமைகளை ஊகித்து அக்கிரியைகளைச் செய்யவும். எல்லாவற்றிலும் **'பிரணவத்தை'** முன்பற்றவும்.

வளைவுக் கோடுகளில் உள்ள எண்கள் சுலோக எண்களையும், மற்ற எண்கள் நாமாக்க ளின் எண்களையும் குறிக்கும்)

**(சுலோகம்** 1) 1. **ஸ்ரீசிவ:** - ஸ்ரீ என்னும் சொல்லுக்குப் பொருள்கள் பல. அவற்றில் வேதம், லக்ஷ்மி, ஸரஸ்வதி, புத்தி, ஐச்வர்யம், அழகு, திரிபுரஸுந்தரி என்பன போன்றவைகளும் மேலும் பல அர்த்தங்களும் கூறப்படுகின்றன. சிவ: எனில் பரப்பிரம்மம், மங்களம், ஒளி, நிஷ்களசொருபம், மோக்ஷம், எல்லாவற்றிலும் ஸமமாக இருக்கும் தன்மை, இரண்டாக இருக்கும் தன்மை, எல்லாவற்றிலும் உள்ளுறைந்திருக்குந் தன்மை முதலிய பொருள்களாம். எனவே, ஸ்ரீயோடு கூடிய உருவன் இறைவன், அம்பிகையோடு கூடிய இறைவன், பின்னும் கூறப்பட்ட அத்தனைப் பொருள்களோடும் கூடின இறைவன் "ஸ்ரீ நடராஜராஜர்" இந்நாமாவுக்கு மேலும் பலவாறாகப் பொருள்கள் உள. விரிவஞ்சி விடுத்தாம். "ஸ்ரீ" என்று தொடங்குவதால் இதை ஓதுபவர்கட்கு எல்லா இஷ்டங்களும் எளிதில் நிறைவேறும், பரமன் அருளும் கிட்டும் என உணரப்படுகிறது. 2. **ஸ்ரீசிவாநாத:** - மங்களத்தைச் செய்கிறவளான அம்பிகையோடு யாசிக்கிறவன் (அல்லது) அவ்வம்பிகையால் யாசி க்கப்பட்டவன். அவ்வம்பிகைக்குப்பதி. 3. **ஸ்ரீமான்** - அணிமா முதலிய சம்பத்துக்க ளைத் தரித்தவன். எல்லாவற்றுக்கும் மேலான அழகு உள்ளவன். உலகைக் காக்கும் திருமால் உருவம் தாங்கிய படியால் லக்ஷ்மியை மார்பில் உடையவன். விபூதி அணிந்தவன். 4. **ஸ்ரீபதிபூஜித:** - லக்ஷ்மியின் கணவனான திருமாலால் பூஜிக்கப்பட்ட வன். 5. **சிவம்கர:** -- சிவம் என்பது அவ்யயச் சொல் (வழுவாச் சொல்) அதற்குத் தங்கம் எனப் பொருள். தங்கத்தைக் கையிலுள்ளவன் (தங்கமயமான மேருவை வில் லாகக் கொண்டவன்) தனதுருவைக் கண்டவனுக்கும், தன் மந்திரத்தை ஜபித்தவனு க்கும் இந்த தனது தோத்திரத்தால் துதித்தவனுக்கும் இம்மையில் எல்லாவற்றையும் அளித்து இறுதியில் மோக்ஷம் அளிப்பவன். 6. **சிவதர:** - மிகவும் மங்களமானவன், மங்களமளிப்பவன். 7. **சிஷ்டஹ்ருஷ்ட:** - தரும வழியில் இருப்பவர்களிடம் பிரிய முள்ளவன். 8. **சிவாகம**: - பர்வதராஜகுமாரியான கௌரியால் (தவம் இயற்றி) அடையப்பட்டவன். தனது பக்தர்களுக்கு மோக்ஷத்தை அடைவிப்பவன். (ஸ்ரீ மணிவாசகரைக்காக்க வேண்டி குதிரை (உருக்கொண்ட) நரிகளை வரவழைத்தவன். சிவசப்தத்தை முன்பற்றின அம்பிகையின் தவநிலையையறிய வேண்டி அவன் அமர்ந்த இமயமலையில் உள்ள கௌரி சிகரத்தை அடைந்தவன்.

இவ்விதம் பரமனுடைய மஹிமையைச் சிறிது விளக்கி அவனது உருவ அமைப்பு விளக்கப்படுகிறது.

(2) 9. **அகண்டானந்தசித்ரூப:** - பெரிய ஆனந்தத்தை அளிக்கின்ற திருமேனியன். பேரின்பத்தை அருளும் ஞான வடவன். 10. **பரமானந்ததாண்டவ:** - மிக உயர்ந்த ஆனந்தத்தை உண்டுபண்ணும் கூத்த வடிவினன். 108 கூத்துக்களுக்கு முதல் பரமானந்ததாண்டவ : காரணமானதாலும் நிஷ்களம் இவ்வடிவை முதலில் ஏற்ற கூத்தானதாலும் ஐந்தொழிலுக்கு காரணமானதாலும் நிஷ்களம் இவ்வடிவை முதலில் ஏற்றபடியாலும் 'பரம' என்ற சிறப்புக்கூறு அமைந்தது. தண்டு முனிவரால் கூறப்பட்டுள்ள பல கூத்துகளில் அதிகப் பிரியமுள்ளவன். அம்பிகையை அல்லது யோகிகளை இன்புறச் செய்ய வேண்டி எடுத்த கூத்தனுருவன். 11. **அபஸ்ம்ருதி**

**ந்யஸ்தபாத:** - அபஸ்ம்ருதி என்பது ஒரு ரோகமாகும். அந்த ரோகமுள்ளவனுக்கு தன் நினைவு இராது. அவனைப் பிறர் பார்க்கவும் கூடாது என்பர். அந்த ரோகமே உருக்கொண்டு தாருகவன முனிவர்களுடைய ஆபிசார வேள்வி குண்டத்தில் உண்டாகிப் பரமனைத் தீண்டவர அதன் முதுகில் தனது வலத்திருக்காலை வைத்து மிதித்தவன். **12. க்ருத்திவாஸா:** - நரசிம்மத்தின் தோலையணிந்தவன். க்ருத்தி என்பது பிராணியின் தோலாகும். பரமன் யானை, புலி, சிங்கம் இவற்றின் தோல்களை அணிந்தவன் எனப் புராணங்கள் கூறும். யானை. புலி இவற்றின் தோல்களை அணிந்தவன் என்று மேல் வரும் நாமாக்களில் கூறப்படுவதால் இங்கு நரசிம்மத்தின் தோல் என்பது தேற்றம். **13. க்ருபாகர:** - அடியாருக்கு அருள்பவன். அருளுக்கு இருப்பிடம். கிருபர் முதலானவர்களுக்கு (ஏழு சிரஞ்ஜீவிகளுக்கு) பாபமகற்றி அருளினவன்.

(3) **14. காளீவாதப்ரிய:** - காளியின் காளியின் வாதக்கூத்தில் ப்ரியமுள்ளவன். காளீ காளீ என உச்சரிக்கும் அடியவர்களிடம் ப்ரியமுள்ளவன். (காளீ என்று கூறுதல் கூடாதென்று சாக்த பரசுராம கல்ப சூத்திரம் கூறுவதானது கேவலம் சக்தி உபாஸ கர்களுக்கேயாகும்) **15. கால:** - முக்கால உருவன் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகக் காலங்கள் மூன்றுகும். எல்லா வடிவமாயும் இருந்து யாவற்றை யும் செய்கிறவன். **16. காலாதீத:** - காலங்களைக்கடந்தவன், யமனுக்கு அப்பாலன். **17. கலாதர:** - சந்திர கலையை அணிந்தவன். 64 கலைகளைத் தரித்தவன். **18.** காலநேதா - முக்காலங்களை அல்லது யமனை ஏவுபவன். **19. காலஹந்தா** - யமனைக் கொன்ற வன். காலஸம்ஹார மூர்த்தி. **20. காலசக்ரப்ரவர்த்தக:** - கல்பம், யுகம். வருஷம். அயனம், ருது, மாதம், பக்ஷம், வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம், முகூர்த்தம், நாழிகை. மாத்திரை, லவம் முதலான காலக் கூட்டங்களை முன்போல வே ஏவி நடத்துபவன்.

(4) **21. காலக்ஞ:** முற்கூறிய காலங்களை அறிந்தவன். **22. காமத:** - விருப்பங்களை அளிப்பவன்; திருமாலுக்கு காமன் என்னும் மைந்தனை ஈந்தவன். **23. காந்த:** - அழகு வாய்ந்தவன். பிரம்மனை அருகில் இருக்க அருளினவன் **24. காமாரி:** - மன்மதனுக்குப் பகைவன் (மன்மதனை எரித்தவன், **25. காமபாலக:** - காமனை ரக்ஷித்தவன் (பிழைப்பித்தவன்) **26. கல்யாணமூர்த்தி:** - மங்கள உருவன், பொன்னுர் மேனியன். தேவியின் கல்யாணத்தின் பொருட்டு உருவம் கொண்டவன். (இதைக் காளிதாஸரும் தேவீ ஸ்துதியில் விளக்குகிறுர்). **21. கல்யாணீரமண: -** அம்பிகை யோடு விளையாடுகிறவன். **28. கமலேக்ஷண:** - தாமரை போன்ற கண்ணன், விஷ் ணுரூபன்.

(5) **29. காலகண்ட:** - காளமேகம் போல் கறுத்த கழுத்துடையவன், நீலகண்டன். **30. காலகால:** - யமனுக்கும் யமனானவன். **31. காலகூடவிஷாசன:** அம்ருதம் விரும்பிய தேவாஸுரர்கள் கடைந்த பாற்கடலிலிருந்து உண்டான காலகூடம் என்னும் விஷத்தை உண்டவன். **32. க்ருதக்ஞ: -** தான் செய்ததை அறிந்த வன், பிராணிகளால் செய்யப்பட்ட வினைகளை அறிந்தவன். **33. க்ருதிஸாரக்ஞ:** - செய்கைகளின் உயர்வை அறிந்தவன். **34. க்ருசானு:** - அறிந்தவன். **34. க்ருசானு: -**

அக்னி உருவன், 35. **க்ருஷ்ண பிங்கள:** - நீலம், பொன் இவ்விரண்டு வர்ணமுள்ள உருவன்.

(6) 36. **கரிசர்மாம்பரதர:** - யானைத்தோலை ஆடையாகக் கொண்டவன் (கஜ ஸம்ஹார மூர்த்தி). 37. **கபாலீ** - அம்ருதபாத்திரம் கைக்கொண்ட மூர்த்தி; பிரம்ம னின் தலையைக் கொய்து அவ்வோட்டைத் தரித்தவன், பிரமசிரக் கண்ட கபாலீ. (பைரவ மூர்த்தி) 38. **கலுஷாபஹ:** - பிராணிகளின் பாபத்தை (அஞ்ஞானத்தை) அகற்றுபவன், விஷ்ணுவின் மச்ச உருவைத் தண்டித்தவன். (மத்ஸ்யாரி மூர்த்தி) 39. **கபாலமாலாபரண:** - பிரம கபாலங்களை மாலையாக அணிந்தவன். (இவ்வித பிரம கபாலங்கள் முப்பத்திரண்டு கொண்ட ஆபரணம் சிதம்பரம் ஸ்ரீ நடராஜருக்கு உளது). 40. **கங்காள:** - வாமனனைத் தண்டிக்க வேண்டி கங்காளபைரவ உருக்கொண்டவன், வாமன நிக்ரஹ மூர்த்தி; சட்டை நாதர். (கங்காளம் தோள் மேலே காதலித்தான் காணேடி என்பது திருவாசகம்). 41. **கலிநாசன:** - பாபத்தை அகற்றுபவன். கலியுக முடிவில் கல்கி உருக் கொண்ட திருமாலால் துஷ்டர்களை நசிப்பிக்கிறவன். யாக அணிந்தவன்.

(7) 42. **கைலாஸவாஸீ** - கைலாஸமென்னும் மலையில் வீற்றிருப்பவன். பிரம்ஹரந்திரத்தில் விளங்குபவன். ஸ்படிக லிங்கத்தில் எப்போதும் ஸாந்நித்யமுள் ளவன். (இதனாலேயே சிதம்பர சபையில் ஸ்படிகலிங்க பூஜை விசேஷமாக நடைபெற்று வருகிறது). 43. **காமேச:** - ஸ்ரீசக்ரபிந்து பீடத்தில் விளங்குபவளான சிவகாமேச்வரியின் பதி. அனுபவிக்கத் தக்க வஸ்துக்களுக்கெல்லாம் ஈசன். (பிரம்ம விஷ்ணு உருவன்). 44. **கவி:** - ஸகல காவியங்களைச் செய்தவன், வால்மீகி உருவன். 45. **கபடவர்ஜித:** - உள்ளொன்று வைத்துப் புறமொன்று கூறாதவன். ஒரு பதார்த்தத் தை மறைத்து வேறு பதார்த்தத்தைக் காண்பித்தல் கபடமாம். 46. **கமனீய:** - அழகன், மனோஹரன். 47. **கலாநாத சேகர:** - சந்திரனைத் தலையில் அணிந்தவன். 48. **கம்பு கந்தர:** - சங்கம் போன்ற கழுத்துள்ளவன்

(8) 49. **கந்தர்பகோடிஸத்ருச:** - கோடி மன்மதர்களுக்கு ஒப்பானவன். 50. **கபர்தீ** - கபர்தம் என்று பெயரிய ஜடை உள்ளவன். 51. **கமலானன:** - தாமரை போன்ற முக முள்ளவன். 52. **கராப்ஜத்ருதகாலாக்னி:** - கரகமலத்தில் அனல் ஏந்தியவன். அவ்வ னல் பிரளயகாலமஹாக்னி. 53. **கதம்ப குஸுமாருண:** - அடைப்பைப் பூ போல் சிறி தே சிவந்த மேனியன்.

(9) 54. **கமநீயநிஜானந்த முத்ராஞ்சித கராம்புஜ:** - அழகு வாய்ந்ததும், தனது ஆனந்த தாண்டவத்தைக் காண்பிப்பதுமான கையை உடையவன். (இதனால் பரமனின் நீட்டித் தொங்கவிடப்பட்ட '**டோலஹஸ்தம்**' என்னும் இடக்கீழ்த்திருக் கரம் கூறப்பட்டது). 55. **ஸ்புரட்டமரு நித்வான நிர்ஜிதாம் போதி நிஸ்வன:** - தனது வலது மேல் திருக்கையில் விளங்குகிற உடுக்கை ஒலியால் அடக்கப்பட்ட கடலோ சையை உடையவன் (தனது உடுக்கையில் தோன்றின அ, இ, உண் என்பன வாதியான பதினான்கு ஸூத்திரங்களால் அளவு கடந்த பிழைச்சொற்களை நிராகரித்தவன்; வடமொழி இலக்கணம் அருளிச்செய்தவன்.

(10) 56. **உத்தண்டதாண்டவ:** (இனி, சிவதாண்டவ பேதங்கள் கூறப்படுகின்றன) தண்டம் போல உயர்ந்து நின்று ஆடுபவன். பரிக்கோல் கொண்டு ஆடுகிறவன். 57. **சண்ட:** - அதிக கோபத்தோடு ஆடுகிறவன் அல்லது சண்டன் உருவன். 58. **ஊர்த்வதாண்டவ பண்டித:** - ஒரு காலை உயரே வீசி ஆடுபவன். தில்லை, திருவால ங்காடு ஸ்தலங்களில் இவ்வுருவம் விளங்கா நிற்கின்றது. பூமி ஸ்பர்சமின்றி ஆகாசக் கூத்தியற்றுவதில் வல்லவன். 59. **ஸவ்யதாண்டவ ஸம்பன்ன:** - மேற்கூறிய ஊர்த்வதாண்டவத்தையும் ஆனந்த தாண்டவத்தையும் இடசாரி வலசாரி யாக மாறி ஆடுவதில் ஸமர்த்தன். இக்கூத்தில் முன்னது வலக்கால் தூக்கியும், ஆனந்த தாண்டவம் இடக்காலைத்தூக்கியும் தில்லையில் ஆடியபின் ஊர்த்வதாண்டவ த்தில் இடக்காலைத்தூக்கி திருவாலங்காட்டிலும், வலக்காலைத்தூக்கி ஆனந்தநடனம் மதுரையிலும் நிகழ்த்தியதைக் குறிக்கும். 60. **மஹாதாண்டவபைரவ:** - கல்பம், பிரளயத்துக்கு முன் இயற்றும் பெருங்கூத்தினால் மஹிமை வாய்ந்தவன்.

(11) 61. **ப்ரஹ்மாண்டகாண்ட விஸ்போட மஹா ப்ரளய தாண்டவ:** - பிரம்மனால் படைக்கப்பட்ட எல்லா அண்டங்களும் அற்றுப்போகுங்காலமாகிய மஹாஸம்ஹார காலத்தில் தனியனாக ஆடுபவன். 62. **மஹோக்ரதாண்ட வாபிக்ஞ:** - மஹோக்ரன் ஓர் ருத்திரன் அல்லது பெருங் காற்று, இவர்களின் கூத்து அறிந்தவன். (அல்லது) தன் தாண்டவ நுட்பம் அறிந்த மஹோக்ரர்களையுடையவன். 63. **பரிப்ரமண தாண்டவ:** - நாற்புறமும் சுழன்று ஆடுபவன்.

(12) 64. **நந்திநாட்யப்ரிய:** - நந்தியின் ஆட்டத்தில் அன்புள்ளவன். தாளவாத் தியங்கள் நிறைந்த கூத்து நந்திக் கூத்து, அக்கூத்தில் இசைந்தவன். 65. **நந்தீ** - தனது கூத்தினால் எப்போதும் உலகை ஆனந்திக்கச் செய்கிறவன், ஆனந்தமுள்ளவன், நந்தியின் உருவன். 66. **நடேச:** - இந்நாமா இத்துதிக்கு அபிமானமான தேவதைக்கு முக்கியமாகும். இந்நாமாவை ஒருமுறை சொன்னாலும் பாபங்களை அகற்றப் போது மானதே. நடன் என்பது பரதனையும் அவன் சீடர்களையும் குறிக்கும். அவர்களுக்கு நியாமகன் ஈசன் என்றும் கூறுவர். நடன் என்னும் சொல் பரதனைக் குறிப்பதால் அவனது கண்டத்தில் உள்ள நாமெல்லோரும் பாரதாளே. நமக்கும் உபாஸ்ய மூர்த்தி நடேசரே. ஆகவே இப்பாரத தேசத்தினர் எல்லாரும் நடேசரைத்தான் சரணம் அடைய வேண்டும் எனக் கருத்து. 67. **நடவேஷப்ருத்** - கூத்தன் வேஷம் பூண்டவன். 68. **காளிகாநாட்யரஸிக:** - ஸர்வஸம்ஹார காலத்தில் **'காளராத்ரி'** என்ற காளியோடு ஆட இசைந்தவன். 69. **நிசாநடன நிச்சல:** - இரவுக் கூத்தால் அசைவற்ற உலகன். தன் கூத்துக் கண்டு அசைவற்ற காளியைக் கொண்டவன்.

(13) 70.**ப்ருங்கி நாட்ய ப்ரமாணக்ஞ:** - பிருங்கி முனிவரின் கூத்தின் வரம்பு அறிந்தவன். இம்முனிவரின் கதை பிரஸித்தமே. 71. **ப்ரமராயிதநாட்யக்ருத்** - வண்டு கள் சுற்றுவது போலும், அதன் ஒலி போல் ஒலித்துக் கொண்டும் கூத்தாடுகிறவன். 72. **வியதாதி ஜகத்ஸ்ரஷ்டா** - ஆகாசம் முதலான உலகங்களைப் படைத்தவன். 73. **விவிதானந்ததாயக:** - ஸ்ரக் - சந்தன வநிதா போகங்களால் உண்டாகும் பல ஆனந்தங்களை அளிப்பவன் அல்லது உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள மனுஷ்ய, கந்தர்வ, தேவ ஆனந்தங்களை தகுதிக்கேற்ப அளிப்பவன்.

(14) 74. **விகாரரஹித:** - மாறுபாடு அற்றவன்; எக்காலத்திலும் எவ்விதச் சேர்க்கையாலும் கெடாதவன். 75. **விஷ்ணு:** - எங்கும் நிறைந்தவன், எங்கும் உள்ளவன். திருமால் உருவன். 76. **விராடீச:** - மிகவும் விளங்குகிற ஈசன்; பிரமனுக்கு ஈசன்; பக்ஷி அரசன்; பக்ஷிகளை வாகனங்களாகக் கொண்டவன். 77. **விராண்மய:** - உலகு உருவினன். 78. **விராட்ஹ்ருதய பத்மஸ்த:** - பூமியின் இதயத் தாமரையில் (சிதம்பர சபையில்) விளங்குபவன். ச்யேன சயனம் என்னும் வேள்விக்குண்டத்தில் விளங்குபவன். கருடனை வாகனமாகக் கொண்ட திருமாலின் மார்பில் இருப்பவன். (தியாகேசன்). 79. **விதி:** - பிரமனின் வடிவன். வேதங்களில் கூறப்பட்டுள்ள லிங், லேட், லோட் ப்ரத்யயங்களின் அர்த்தரூபன். 80. **விச்வாதிக:** - உலகைக் கடந்தவன். 81. **விபு:** - ஹரி, ஹர, துர்கா, விநாயக, ஸ்கந்த உருவங்களோடு இருந்து ஆங்காங்கு போற்றப்பட்டு அருளுகிறவன். எல்லோருக்கும் ஈசனான இறைவன், தர்மங்களை நிலை நிறுத்த வேண்டி அந்தந்த காலங்களில் உருக்கொள்பவன்.

(15) 82. **வீரபத்ர:** - தக்ஷன் வேள்வியை அழிக்க வீரபத்ரன் என்னும் உருவங் கொண்டவன். வீரர்களுக்கு சுவர்க்கம் அருள்புரிபவன். 83. **விசாலாக்ஷ:** - நீண்ட கண்ணன், விசாலாக்ஷியின் பதி (விச்வநாதர்). 84. **விஷ்ணுபாண:** - திரிபுராஸுரர் களை அழிக்குங்கால் திருமாலை அம்பாகக் கொண்டவன். (இந்த ஸ்தலம் அஷ்ட வீரட்டங்களில் ஒன்றாகிய, வீரட்டேசுவரர் ஆக விளங்கும், "திருவதிகை" ஆகும். இதனருகில் "சரநாராயணப் பெருமாள்" ஸ்தலமும் இருக்கிறது). இக்கதை வேதத்தி லுங் கூறப்பட்டுள்ளது. "அம்பதுவானவனே" என்பது திருமங்கையாழ்வார் பாடல். 85. **விசாம்பதி:** - மூன்றாவது வர்ணத்தாருக்குத் தலைவன். 86. **வித்யாநிதி:** - பதினெட்டு வித்யைகளுக்கும் இருப்பிடமானவன். 87. **விரூபாக்ஷ:** - நெற்றிக் கண்ணன், ஒளியகற்றும் தேவன் உருவன். விரூபாக்ஷஸ்தல மூர்த்தி. (ஹம்பி). 88. **விச்வயோநி:** - உலகத் தோற்றத்துக்குக் காரணன் அல்லது தனது ஸகள நிஷ்கள உருவத்துக்கு (லிங்கத்துக்கு) விச்வனை - விஷ்ணுவை (யோநியாக) ஆவுடையா ராகக் கொண்டவன். 89. **வ்ருஷத்வஜ:** - இடபக்கொடியுடையவன்.

(16) 90. **விரூப:** - உருவமற்றவன், பக்ஷி உருவன். 91. **விச்வதிக்வ்யாபீ** - உலகையும் திக்குகளையும் நிறைத்தவன். 92. **வீதசோக:** - துக்கமற்றவன். 93. **விரோசன:** - மிகவும் விளங்குபவன். 94. **வ்யோமகேச:** - ஆகாயத்தைக் கேசமாகக் கொண்டவன். 95. **வ்யோமமூர்த்தி:** - ஆகாய வடிவன்; அதிபூதத்தில் ஆகாசத்தல மான சிதம்பரத்தையே தனது திருமேனியாகக் கொண்டவன். 96. **வ்யோமாகார:** - ஆகாயத்தைப் படைத்தவன். பஞ்சமுக ஸதாசிவ உருவன், வெளி வடிவன். 97. **அவ்யயாக்ருதி**: - அழிவற்ற உருவன்,

(17) 98. **வ்யாக்ரபாதப்ரிய:** - வ்யாக்ரபாதர் என்னும் புலிக்கால் முனிவரிடம் அன்பு கொண்டவன். இம் முனிவரின் பெயர் வேதத்தில் கூறப்பட்டதே. இவரின் கதையை கோயிற்புராணம், ஸபாபதி விலாஸம் (தில்லைத்திருநடனம்) முதலிய நூல்களில் கண்டு கொள்க. 99. **வ்யாக்ரசர்மத்ருத்** - தாருகாவனத்திலுள்ள முனிவர்க ளின் ஆபிசாரவேள்விக் குண்டத்தினின்றும் கிளம்பித் தன்னைத் தாக்கவந்த புலியை உரித்து அத்தோலைக் (ஆடையாக) அணிந்து கொண்டவன். 100. **வ்யாதிநாசன:** - வியாதிகளைப் போக்கடிப்பவன். தன்வந்த்ரி முதலான ஸித்தர்களின் உருவந்தாங்கின

வன் என்பது கருத்து. 101. **வ்யாக்ருத:** - (மிகவும்) எல்லா இடங்களிலும் எல்லா வற்றையும் செய்பவன். உருவம் நாமம் கொண்டவன். 102. **வ்யாப்ருத:** - வியாபாரமுள்ளவன் (வியாபாரம் - செய்கை) 103. **வ்யாபீ** - எங்கும் நிறைந்தவன். 104. **வ்யாப்யஸாக்ஷி** - உள்ளிருந்து அறிபவன். 105. **விசாரத:** - புலவன்.

(18) 100. **வ்யாமோஹநாசன:** - அஞ்ஞானம், சரீரம் இவற்றில் அபிமானத்தை யும், மூர்ச்சையென்னும் பிணியையும் அகற்றுபவன். 107. **வ்யாஸ:** - வேதம் முதலிய எல்லாக்கலைகளையும் வகுத்து அருளினவன். இவ்வகுத்தல் 'சிந்தாமணி' எனும் வடமொழிப் பேருரையில் காண்க. வியாஸமுனிவரின் உருவன். 108. **வ்யாக்யாமுத்ராலஸத் கர:** - சொல்லாமற் சொல்லும் அடையாளம் கொண்ட திருக்கரத்தன், ஆலமர் கடவுள். 109. **வரத:** - அடியவர்களுக்கு அவர்கள் விரும்பியதை அளிப்பவன். 110. **வாமன:** - முமுக்ஷுக்களால் ஸேவிக்கப்பட்டவன். சிறிய உருவன்; மஹாபலியின் கர்வத்தை அடக்கவேண்டி அவதரித்த திருமால் வடிவன். 111. **வந்த்ய:** - எல்லோராலும் வணங்கப்படுகிறவன். 112. **வரிஷ்ட:** - எல்லாவற்றுக்கும் மேலானவன், 113. **வஜ்ரவர்மப்ருத்** - வைரக்கவசம் அணிந்தவன், வஜ்ரம் என்ற ஆயுதத்தையும், போர்வையையும் பூண்டவன்.

(19) 114. **வேதவேத்ய:** - வேதங்களால் அறியத் தகுந்தவன். 115. **வேதரூப:** - மறை வடிவானவன். 116. **வேதவேதாந்தவித்தம:** - வேதங்களையும் அவற்றின் முடிவையும் அறிந்தவன். 117. **வேதார்த்தவித்** - வேதப்பொருளை அறிந்தவன். 118. - **வேதயோநி:** - வேதங்களுக்கு இருப்பிட மானவன். 119. **வேதாங்க:** - வேதங்களை அவயவங்களாகக் கொண்டவன். 120. **வேதஸம்ஸ்துத:** - மறைகளால் துதிக்கப்பட்ட வன்.

(20) 121. **வைகுண்டவல்லப:** திருமாலைப் பத்தினியாகக் கொண்டவன். (கந்தபுராணத்தில் இக்கதை விரிவாக கூறப்பட்டுள்ளது). 122. **அவர்ஷ்ய:** - மழை யின்றி உண்டாகும் வஸ்துக்களின் உருவன் (அல்லது) கடல் வடிவன். 123. **வைச்வானரவிலோசன:** - தீக்கண்ணன் (அல்லது) அந்தர்வேதி என்னும் க்ஷேத்திரத் தில் பிரமனுல் செய்யப்பட்ட வேள்வியின் ஆஹவனீய அக்னி குண்டலத்திலிருந்து சாண் உருவில் இரத்தினமயமான வடிவோடு வெளிவந்தவன். இரத்தினசபாபதி மூர்த்தி. இக்கதையைச் சிதம்பரபுராணம் சிதம்பர ரஹஸ்யம் இவைகளினால் கண்டு கொள்ளலாம். இம்மூர்த்தி சிதம்பரத்தில் மத்யான்ன காலத்தில் பூஜிக்கப்படுகிறது. 124. **ஸமஸ்தபுவனவ்யாபீ** - எல்லா உலகங்களிலும் நிறைந்தவன். 125. **ஸம்ருத்தி:** - அதிக ஐச்வர்யம் உடையவன். 126. **ஸததோதித:** - அடிக்கடிதோன்றுபவன், எப்போதும் விளங்குபவன்.

(21) 127. **ஸூக்ஷ்மாத்ஸூக்ஷ்மதர:** - பாரிமாண்டல்யம் என்கிற அணுவுக்கும் அணுவானவன். 128. **ஸூர்ய:** - ஸூர்ய ரூபன். 129. **ஸூக்ஷ்மஸ்தூலத்வவர்ஜித:** - சிறிதும் பெரிதும் அற்றவன். 130. **ஜன்ஹுகன்யாதர:** - ஜன்ஹு முனிவரின் குமாரி யான கங்கையை அணிந்தவன். 131. **ஜன்ம ஜரா ம்ருத்யுநிவாரக:** - பிறவி, மூப்பு, இறப்பு இவைகளை அகற்றுபவன்.

(22) 132. **சூரஸேன:** - சூரர்களான சேஜைகளை உடையவன். 133. **சுபாகார:** - மங்கள உருவன். விஷ்கம்பம் முதலான யோகங்களில் அவ்வப்பெயருள்ள யோக வடிவன். 134.**சுப்ரமூர்த்தி:** - வெண்மையான உருவன். 135. **சுசிஸ்மித:** - வெளுப்பான அல்லது தீப்போன்ற சிரிப்புள்ளவன். (பக்தர்களைக் காக்க வெண்மையாயும், திரிபுராசு ரர்களை மாய்க்க தீச்சிரிப்பும் உள்ளவன்) 136. **அனர்க்கரத்னகசிதகிரீட:** - விலையுய ர்ந்த இரத்தினங்களால் இழைக்கப்பட்ட முடியணியன். 137. **நிகடேஸ்தித:** - அடியார்க ளுக்கு அருகில் இருப்பவன், புண்யநதிகளின் ஸமீபத்தில் ஆலயம் கொண்டவன்.

(23) 138. **ஸுதாரூப:** அமிருத வடிவன். 139. **ஸுராத்யக்ஷ:** - தேவர்கட்குத் தலைவன். 140. **ஸூப்ரூ:** - அழகிய புருவம் கொண்டவன். 141. **ஸுககன:** - சுகங்களுக்கு மேகம் போன்றவன் (அதாவது சுகங்களை மேகம் போல் பொழிபவன்) 142. **ஸுதீ:** - நன்மதியன். 143. **பத்ர:** - மங்கள உருவன், பத்ரம் என்கிற காரணகால ரூபி, இடப உருவன். 144. **பத்ரப்ரத:** - மங்களங்களை அளிப்பவன். 145. **பத்ரவாஹன:** - (இடபத்தை, யாஜையை) வாஹனமாகக் கொண்டவன். 146. **பக்தவத்ஸல:** - அடியவர்களிடம் அன்பு கொண்டவன்.

(24) 147. **பகநேத்ரஹர:** - சூரியனுடைய கண்ணைப் பிடுங்கியவன் 148. **பர்க்க:** - சூரியனின் ஒளி ரூபி (காயத்ரியின் இதயத்தில் விளங்குபவன்) 149. **பவக்ன:** ஸம்ஸார பந்தத்தை அகற்றுபவன். 150. **பக்திமன்நிதி:**- அடியவர்களுக்கு கருவூலம். 151. **அருண:** - சிவந்த மேனியன், இரவியின் ஸாரதி. 152. **சரண:** - காக்கிறவன். 153. **சர்வ:** - எல்லா சப்தங்களையும் ஒரேகாலத்தில் அறிந்தவன்; சப்த ப்ரும்ம ரூபன் ஆனபடியால் ஸமூஹாலம்ப பரமனைப்பற்றது. பிருதிவீ தத்வாபிமானிநீ தேவதை. அங்காரக கிரஹத்தை ஈன்றவன். பரமனின் எட்டு நாமங்களில் இரண்டாவதாகும். 154. **சரண்ய:** - காப்பவரில் சிறந்தோன். 155. **சர்மத:** - சுகத்தையளிப்பவன்.156. **சிவ:** - இதன் பொருள் முதல் நாமாவில் கூறப்பட்டதே. சிகாரம் பரமனையும், வகாரம் அம்பிகையையும் உணர்த்தும். இதன் பெருமை அளவு கடந்தது. மறைநடுவில் மணி போல் விளங்குவது. அதுபோல் இந்நாமாக்கள் நடுவிலும் விளங்கப் பெறுவது.

(25) 157. **பவித்ர:** - பரிசுத்தன். இந்திரனின் வஜ்ராயுதத்திலிருந்து பக்தனைக் காத்தவன். 158. **பரமோ தார:** - மிகவும் உதாரசீலன், நன்கொடையாளன். 159. **பரமாபந்நிவாரக:** - பெரிய ஆபத்தினின்றும் விடுவிப்பவன். 160. **ஸநாதன:** - பழமையானவன். மூவகைப் பரிச்சேத மற்றவன். 161. **ஸம:** - எல்லாம் ஸமமாகக் கொண்டவன். 162. **ஸத்ய:** - மெய்ப்பொருள். 163. **ஸத்யவாதீ** - மறை வடிவன் ஆனதால் உண்மை விளம்பி. 164. **ஸம்ருத்தித:** - செல்வத்தை அளிப்பவன்.

(26) 165. **தன்வீ** - வில்லை ஏந்தினவன் (பிநாகமன்று) மேருமலை அவ்வில்லாம். 166. **தநாதிப:** - பொருளுக்கு ஓரதிபதி, குபேரன். 167. **தன்ய:** - புண்யவான், பொருள் சம்பாதிக்கும் உபாயமறிந்தவன். 168. **தர்மகோப்தா** - தர்மம், விருஷபம், யமன், பாண்டவரில் மூத்தவனுன தர்மகத்திரன் இவர்களைக் காத்தவன். 169. **தராதிப:** - பூமி, மலை, வஸு, கர்ப்பநாடி இவைகட்குத் தலைவன். 170. **தருண:** - இளைஞன்.171. **தாரக:** - ஸம்ஸார பந்தத்தினின்றும் தாண்டுவிப்பவன், சிதம்பரம் காசி முதலான ஸ்தலங்க ளில் மரணமுறுவோர்க்கு பைரவனுல் உபதேசிக்கப்படும் தாரபு மந்திரப் பொருளான

வன். 172. **தாம்ர:** - செம்மேனியன். 173. **தரிஷ்ணு**: - தாண்டுபவன். 174. **தத்வபோதக:** - தத்துவங்களை அறிவுறுத்துபவன்.

(27) 175. **ராஜராஜேச்வர:** - ஸ்ரீவித்யாதிபதி, குபேரனுக்கு ஈச்வரன், சக்கரவர்த்திகளான பிருது - மருத்தன் - பரதன் - சசி - பிந்து - கயன் - சிபி - தசரதராமன் - பரசுராமன் - அம்பரீஷன் - மாந்தாதா - திலீபன் - அங்கன் - பகீரதன் - ஸகோத்ரன் - நந்தி தேவன் - யயாதி - ஸகரன் இவர்களுக்கு ஈச்வரன். 176. **ரம்ய:** - அழகன். 177. **ராத்ரிஞ்சரவிநாசன:** - அரக்கர்களை அழிப்போன். 178. **கஹ்வரேஷ்ட:** - (இதய) குகையில் வசிப்பவன். 179. **கணேசீ:** - பிரமத கணங்களுக்குத் தலைவன். 180. **கணேச:** - விநாயகன் உருவன். ஆதித்யன் முதலான கண தேவதைகளுக்கு எஜமானன், ஜீவன் உருவன். 181. **கதிவர்ஜித:** - நடையற்றவன், ஆத்மரூபி.

(28) 182. **பதஞ்ஜலிப்ராணநாத:** - பதஞ்ஜலி முனிவரால் போற்றப்பட்டவன். 183. **பராபர விவர்ஜித:** - தன்னைக் காட்டிலும் உயர்ந்தவனோ வேறானவனோ அற்றவன். 184. **பரமாத்மா** - பரம் பொருள், ஸ்ரீ நடராஜ மூர்த்தி. 185 **பரம்ஜ்யோதி:** - சூரியன் முதலான ஒளிப்பிழம்புகட்கும் மேலான ஒளி வடிவன். 186. **பரமேஷ்டீ** - ஆசுவலாயன் முனிவருக்கு பிரம்ம வித்யையை உபதேசித்தவன். படைப்போன். உயர்ந்த பதத்தில் இருப்பவன். 187. **பராத்பர:** - பிரசித்தமான வஸ்துக்களுக்கு அப்பாலுள்ளவன்.

(29) 188. **நாரஸிம்ஹ:** - நரசிம்மத்தின் உருவானவன். 189. **நகாத்யக்ஷ:** - மலையரசன், இமாலய உருவன். 190. **நாதாந்த:** - ஸப்த முடிவை அடைந்தவன், மேலை சமுத்திர உருவன். 191. **நாதவர்ஜித:** - சப்தமற்றவன். யோகீ. 192. **நமதானந்தத:** - வணங்கியவர்கட்கு ஆனந்தமளிப்பவன். 193. **நம்ய:** - எல்லோராலும் எப்போதும் வணங்கப்படுபவன். 194. **நகராஜநிகேதன:** - மேரு, கைலாயம் முதலிய மலைகளில் ஆலயம் கொண்டவன். மாவடியமர்ந்தோன் (ஸாக்ஷாத் ஏகாம்ரநாதன்).

(30) 195. **தைவ்ய:** - தேவர்களைக் காப்பதில் வல்லவன். 196. **பிஷக்** - வைத்யன். 197. **ப்ரமாணக்ஞ:** - சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள பிரமாணங்களை அறிந்தவன். 198. **ப்ரம்மண்ய:** - பிரணவப் பொருளுரைக்கத் தவறிய பிரம்மதேவரை (சுப்ரஹ்மண்ய சிக்ஷையினின்று) காத்தவன். 199. **ப்ராம்மணாத்மக:** - மறையோர் வடிவன், தேவர்களுள் பிராம்மண வடிவன். 200. **க்ருதாக்ருத:** - கார்ய காரண உருவன், சகுண நிர்குண வடிவன். 201. **க்ருச: - ஸூக்ஷ்ம உருக்கொண்டவன்.** 202. **க்ருஷ்ண:** - கருத்த மேனியன், பஞ்சப்ரம்மத்தில் அகோரமூர்த்தி, கீதாசார்யனான வாஸுதேவ சொரூபன். 203. **சாந்தித:** - அமைதி அளிப்பவன். 204. **சரபாக்ருதி:** - சரப மூர்த்தியின் உருக் கொண்டவன். இம் மூர்த்தியின் பெருமை உபநிஷத்துக்களிலும் புராணங்களிலும் விரிவுறக் கூறப்பட்டதே.

(31) 205. **ப்ரஹ்மவித்யாப்ரத:** - ஸனகாதிகட்கு பிரம்ம வித்யையை உபதேசிப்பவன். 206. **ப்ரஹ்ம** - சச்சிதானந்தலக்ஷணன், ஆத்மரூபன், 207. **ப்ருஹத்கர்ப:** - பெரிதான பிரம்மாண்டத்தைத் தரித்தவன் அல்லது ஈன்றவன். 208. **ப்ருஹஸ்பதி:** -

தேவபுரோஹிதன். 209. **ஸத்யோஜாத:** - உடனே உண்டானவன் அல்லது ஸத்யோஜாத மூர்த்தி (பஞ்சப்ரம்மத்துள் முதன்மையானவன்). 210. **ஸதாராத்ய:** - எப்போதும் பூஜிக்கத்தக்கவன். 211. **ஸாமக:** - ஸாம வேதத்தை கானம் பண்ணுகிற வன், ஸாமம் என்னும் முதல் உபாயத்தைக் கைப்பற்றுபவன். 212. **ஸாமஸம்ஸ்துத:** - ஸாமவேதத்தில் துதிக்கப்பட்டவன்.

(32) 213. **அகோ:** - சாந்தமான உருவன்; திருவெண்காட்டுடையான். (பஞ்ச ப்ரம்மத்துள் மூன்றுவதான அகோரமூர்த்தி) 214. **அத்புதசாரித்ர:** - ஆச்சரியத்தை உண்டுபண்ணும் திரிபுரஸம்ஹாரம் முதலிய தனது சரித்திரங்களை உடையவன். 215. ஆனந்தவபு: - ஆனந்தமளிக்கும் மேனியன். 216. **அக்ரணீ:** - முதன்மையானவன். 217. **ஸர்வவித்யானாமீசான:** - எல்லாவித்யைகட்கும் ஈச்வரன், குரு. 218. **ஈச்வராணும தீச்வர:** - எல்லா அரசர்கட்கும் மேற்பட்டவன், சக்ரவர்த்தி.

(33) 219. **ஸர்வார்த்த:** - எல்லாப் பிராணிகளாலும் பிரயோஜனம் வேண்டப்பட்ட வன். 220. **ஸர்வதாதுஷ்ட:** - எப்போதும் ஸந்தோஷமுள்ளவன். 221. **ஸர்வசாஸ்த் ரார்த்த ஸம்மத:** - எல்லா சாஸ்த்ரங்களிலும் கூறப்பட்டுள்ள பொருள்களை இஷ்ட மாகக் கொண்டவன். 222. **ஸர்வக்ஞ:** - எல்லாமறிந்தவன். 223. **ஸர்வத:** -எல்லாமளிப் பவன். 224. **ஸ்தாணு:** - சலிக்காதவன் (சலனமற்றேன்) உலகுக்கு ஆதாரமானவன், ருத்ரன், ஸ்திரலிங்கவடிவன். 225. **ஸர்வேச:** - அனைவருக்கும் ஈசன், தலைவன். "என்னப்பன் எம்பிரான் எல்லார்க்கும் தான் ஈசன்" என்பது திருவாசகம். 226. **ஸமரப்ரிய:** - போரில் மகிழ்பவன்.

(34) 227. **ஜநார்தன:** - பாபிகளை நரகம் முதலான வற்றில் பீடிப்பவன், (அல்லது) ச்ராத்த காலத்தில் பூஜிக்கப்படுகிறவன். 228. **ஜகத்ஸ்வாமீ** - உலக எஜமான். 229. **ஜன்மகர்மநிவாரக:** - பிறவிப்பிணி அகற்றுவோன். 230. **மோசக:** - விடுவிப்பவன். 231. **மோஹவிச்சேத்தா** - மனத்தில் உண்டாகும் மோஹத்தைப் போக்கடிப்பவன். 232. **மோதநீய:** - எல்லோராலும் கொண்டாடப்படுகிறவன். 233. **மஹாப்ரபு:** - ஒப்புவமையற்ற பெரிய முதலாளி. இச்சொல் மஹேச்வர:, மஹாதேவ: என்பன போல இப்பரமனைத் தவிர வேறு எந்த தேவனையும் உணர்த்தாது.

(35) 234. **வ்யுப்தகேச:** - சிகையற்றவன், பரமஹம்ஸ சொரூபி (அல்லது) தொங்கு சடையன். "பின்தாழ்சடையானை" எனத் திருமுறை கூறும். அல்லது பரந்த சடையன். 235. **விவிசத:** - மிக்க வெண்மையன். 236. **விஷ்வக்ஸேன:** - நாற்புறமும் பிரமதகண ஸேனைகளை உடையவன் (அல்லது) விஷ்வக்ஸேனன் என்னும் பெயர் கொண்ட ஓர் தேவன். 237. **விசோதக:** - பாபங்களை அகற்றுபவன். பக்தர்களை மிகவும் சோதிப்பவன். 238. **ஸஹஸ்ராக்ஷ:** - ஆயிரங்கண்கள் உள்ளவன், இந்திரனுருவன். 239. **ஸஹஸ்ராங்க்ரி:** - ஆயிரக்கணக்கான திருவடியன். 240. **ஸஹஸ்ரவதனும்புஜ:** ஆயிரக்கணக்கான முகங்களாகிய தாமரைகளையுடையவன். இம்மந்திரம் சிதம்பரத் வனி மந்திரம் என்னும் வடிவத்தின் தியான மூர்த்தியாம்.

(36) 241. **ஸஹஸ்ராக்ஷார்ச்சித:** - இந்திரனுல் பூஜிக்கப்பட்டவன். 242. **ஸம்ராட்** - மிகவும் விளங்குபவன், ராஜ ஸூய யாகம் செய்த அரச உருவன். 243. **ஸந்தாதா** - எல்லோர்க்கும் விஜனப்பயன்கஜளக் கூட்டிவைப்பவன். 244. ஸம்பதாலய: - அணிமா முதலிய செல்வங்கட்கு இருப்பிடம். 245. **பப்ரு:** - பொற்கொன்றை வண்ணன், உல கைத் தாங்குபவன், இடப வடிவினன். 246. **பஹுவிதாகார:** - அனேக உருவினன். 247. **பலப்ரமதன:** - பலன் என்னும் அசுரஜனக் கொன்றவன். இந்நாமா வாமனன் எனும் மூர்த்தியைக் குறிக்கும். 248. **பலீ** - பலம் வாய்ந்தவன்.

(37) 249. **மனோபர்த்தா** - அறிவுக்கு அறிவானவன், 250. **மனோகம்ய:** - அறிவால் அடையத் தகுந்தவன். 251. **மனஜனகபராயண:** - தவமியற்றுபவன். 252. **உதாசீன:** - புண்ய பாவங்களில் ஒட்டாதவன், நடுநிஜலயான். 253. **உபத்ரஷ்டா** - எல்லோராலும் செய்யப்படும் கர்மங்கஜள அருகிலிருந்து காண்பவன். 254. **மௌனகம்ய:** - மோனத்தி ஞல் முனிவர்கட்குத் அடையத் தகுந்தவன். 255. **முனீச்வர:** - முனிவர்கட்குத் தஜலவன். திரிஸஹஸ்ர முனீச்வரர்கள் என்னும் தில்ஜலத்திருவுடை அந்தணர்கட்குத் தஜலமையானவன்.

(38) 256. அமாநீ - அளவற்றவன் 257. **மதன:** - எல்லோரையும் மோஹிக்கும்படி செய்பவன், அல்லது மன்மதன் 258. **அமன்யு:** - கோபமற்றவன் 259. **அமாந:** - அளவிடற்கரியவன் 260. **மாந்த:** - அளவையளிப்பவன். 261. **மநு:** - மந்திரவடிவன் அல்லது மனுச்சக்ரவர்த்தி 262. **யசஸ்வீ** - கீர்த்திவாய்ந்தவன். 263. **யஜமானுத்மா** - - வேள்வி செய்பவனின் உருவன். பரமனின் அஷ்ட மூர்த்தங்களில் ஒருவன். 264. **யக்ஞபுக்** - வேள்விப் பயஜன புசிப்பவன். 265. **யஜனப்ரிய:** - வேள்வியில் பிரிய முள்ளவன்.

(39) 266. **மீடுஷ்டம:** மேக உருக்கொண்டு பொழிபவன். உயர்ந்த புருஷரூபங் கொண்டவன். 267. **ம்ருகதர:** - மாஜன ஏந்தினவன் 268. **ம்ருகண்டுதனயப்ரிய:** - மார்க்கண்டேய முனிவரிடம் அன்புள்ளவன். 269. **புருஹூத:** - வேதங்களில் அதிகமாகச் சொல்லப்பட்டவன். 270. **புரத்வேஷி** - திரிபுரர்கஜள துவேஷித்தவன். 271. **புரத்ரயவிஹாரவான்** - ஜாக்ரத் முதலிய மூன்றவஸ்தைகளில் விஜளயாடுபவன்,

(40) 272. **புண்ய:** - புண்ய சொரூபன். 273. **புமான்** - புருஷ உருவன். 274. **புரிசய:** - எல்லாச் சரீரங்களிலும் இருப்பவன். 275. **பூஷா** - எல்லோரையும் போஷிக்கிறவன், ஆதித்யன் உருவன். 276. **பூர்ண:** - எல்லாவற்றையும் வியாபித்தவன். 277. **புராதன:** - பழமையானவன். 278. **சயான:** - ஸுஷுப்தி அவஸ்தாபன்னன், தூங்குபவன் போலப் படுத்திருப்பவன். 279. **சந்தம:** - மிகவும் ஸுகத்தோடு கூடியவன். 280. **சாந்தம:** - விருப்பு வெறுப்பற்றவன். 281. **சாஸக:** - எல்லோரையும் ஏவுபவன். 282. **ச்யாமளாப்ரிய:** - அம்பிகையிடம் காதல் கொண்டவன்.

(41) 283. **பாவக்ஞ:** - உள்ளக்கிடக்கை அறிந்தவன். 281 **பந்தவிச்சேத்தா** - பிறவிக் கட்டறுப்பவன். 285. **பாவாதீத:** - அறிவுக்கப்பாலுள்ளவன். 286. **அபயங்கர:** -

பயமின்மையை அருள்பவன். அபயகரம் தாங்கினவன். இக்கரம் ஸ்திதியைக் குறிக்கும். 287. **மநீஷீ** - அறிவாளி 288. **மனுஜாதீச:** - மனிதர்களுக்கு அரசன். 289. **மித்யாப்ரத்யயநாசன:** - பொய்யில் உண்டாகும் நம்பிக்கையைப் போக்கடிப்பவன்.

(42) 290.**நிரஞ்ஜன:** - அஞ்ஜனமற்றவன். 291. **நித்யசுத்த:** - எப்போதும் சுத்தி உள்ளவன். 292. **நித்யபுத்த:** - எப்போதும் (எல்லாவற்றையும்) அறிந்தவன். 293. **நிராச்ரய:** - ஒருவனையும் அணுகாத தனியன். 294. நிர்விகல்ப: - மாற்றுதலற்றவன். 295. **நிராலம்ப:** - பிடிப்பற்றவன். 296. **நிர்விகார:** - விகாரமற்றவன். (விகாரம் - மாறுதல்). 297. **நிராமய:** - ரோகமற்றவன்.

(43) 298. **நிரங்குச:** - தகையப்படாதவன். 299. **நிராதார:** - ஆதாரமற்றவன். 300. **நிரபாய:** - அழிவற்றவன். 301. **நிரத்யய:** - தோஷமற்றவன். 302. **குஹாசய:** - இதயத்தில் அல்லது புத்தியில் விளங்குபவன். (சுப்ரமண்யரிடம் (நல்) அபிப்ராயம் கொண்டவன்). 303. **குணாதீத:** - ஸத்வ ரஜஸ் தமோ குணங்கட்கு அப்பாற்பட்டவன். 304. **குருமூர்த்தி:** - (மணிவாசகருக்குக் குருந்தமரத்தடியிலிருந்து உபதேசித்த) ஆசாரியன். 305. **குஹப்ரிய:** - குகனிடம் அன்பு கொண்டவன்.

(44) 306. **ப்ரமாண:** - பிரத்யக்ஷம் முதலிய ஆதாரமானவன் (நிரூபணன்). 307. **ப்ரணவ:** - ஓங்கார வடிவன். 308. **ப்ராக்ஞ:** - ஆக்ஞாஸ்தானத்தில் (புருவ மத்தியில்) விளங்குபவன். ஸுஷுப்தி அவஸ்தை அனுபவிப்பவன். ஒருவராலும் தகைய முடியாத ஆணையாளி. 309. **ப்ராணத:** - பிராணனை அளிப்பவன். 310. **ப்ராணநாயக:** - பஞ்ச பிராணன்களுக்கு அதிபதியானவன். 311. **ஸூத்ராத்மா:** - ஆடைக்கு நூல் போல உலகில் நுழைந்தவன். யக்ஞ ஸூத்ர வடிவன். 312. **ஸுலப:** - சுகமாக அடையத் தகுந்தவன். 313. **ஸ்வச்ச:** - தூய்மையானவன். 314. **ஸூதர:** - அழகான வயிறுள்ளவன். 315. **ஸுந்தரானன:** - அழகான முகமுள்ளவன், ஸுந்தரமூர்த்தி நாயனாரிடம் அன்புள்ளவன்.

(45) 316. **கபாலமாலாலங்கார:** - பிரம்மகபாலமாலையைப் பூண்டவன், 317. **காலாந்தகவபுர்தர:** - கால ஸம்ஹார மூர்த்தியின் வடிவன். (இம்மூர்த்தி அஷ்ட வீரட்டஸ்தலங்களுள் ஒன்றான திருக்கடவூரில் இருக்கிறது) 318. **துராராத்ய:** - முயற்சி செய்தே வழிபடத்தக்கவன். 319. **துராதர்ஷ:** - ஒருவனாலும் பீடிக்கப்படாதவன். 320. **துஷ்டதூர:** - பாபிகளுக்கு அப்பாலுள்ளவன் (எட்டாதவன்) 321. **துராஸத:** - பாபிகளால் அடையத்தகாதவன்.

(46) 322. **துர்விக்ஞேய:** - துஷ்டர்களால் அறியப்படாதவன். 323. **துராசார நாசன:** - அநாசாரங்களை அகற்றுபவன். 324. **துர்மதாந்தக:** - துஷ்டர்களைக் கொல்லுபவன். துர்மதன் என்பவனைச் சிக்ஷித்தவன். (இக் கதை சிதம்பர புராணம் கூறும்) 325. **ஸர்வேச்வர:** - எல்லாவற்றுக்கும் ஈசன். 326. **ஸர்வஸாக்ஷீ** - எல்லாவற்றுக்கும் சாக்ஷியாக இருப்பவன். 327. **ஸர்வாத்மா** - எல்லா வடிவன். 328. **ஸாக்ஷிவர்ஜித:** - ஸாக்ஷி (தனக்கு) அற்றவன் (இன்னவன் இத்தன்மையன் என எவராலும் நிரூபணம் செய்ய முடியாதவன். (**"எழுதிக்காட்ட ஒண்ணாதே"** - அப்பர்)

(47) 329. **ஸர்வ த்வந்த்வக்ஷயகர:** பசி தாகம், சோக - மோஹம், விருப்பு - வெறுப்பு, இன்பம் - துன்பம், புண்யம் - பாபம் இம்மாதிரியான இரட்டைத் தன்மை யுள்ள யாவற்றையும்போக்குபவன். 330. **ஸர்வாபத்விநிவாரக:** - எல்லாவிதமான ஆபத்துக்களேயும் அகற்றுபவன். 331. **ஸர்வ ப்ரியதம:** - எல்லோருக்கும் மிகச்சிறந்த அன்பன். 332. **ஸர்வ தாரித்ரய க்லேசநாசன:** - எவ்வித தரித்திரத்திஞலுண்டாகும் துக்கத்தைப் போக்குபவன்.

(48) 333. **த்ரஷ்டா** - எல்லாவற்றையும் பார்ப்பவன். 334. **தர்சயிதா** - (வியாக்ர பாதர், பதஞ்சலி முதலிய பக்குவான்மாக்களுக்குத் தனது நடனத்தைக்) காண்பிப் பவன். 335. **தாந்த**: -தவத்திஞலுண்டாகும் சிரமங்களேப் பொறுப்பவன், தனரூபன். 336. **தக்ஷிணுமூர்த்திரூபப்ருத்** - தென்முகக்கடவுள் வடிவமெடுத்தவன். 337. **தக்ஷாத் வரஹர:** - தக்கன் வேள்வியையழித்தவன். 338. **தக்ஷ:** - (பஞ்சகிருத்யம் என்னும் ஐந்தொழிலேயும் ஸமகாலத்தில் ஆற்றுவதில்) வல்லவன். 339. **தஹரஸ்த:** -இதயத் தாமரையில் விளங்குபவன். அதிபூதத்தில் சிதம்பரத்தில் விளங்கும் சித்ஸபையின் கண்ணே கூத்தனுக விளங்குபவன். 340. **தயாநிதி:** - கருணே நிரம்பியவன்.

(49) 341. **ஸமத்ருஷ்டி:** - எல்லாவற்றிலும் வேறுபடாது காண்பவன், ஸம நோக் குடையவன். 342. **ஸத்யகாம:** - உண்மையில் ஆசையுள்ளவன். 343. **ஸனகாதி முனிஸ்துத:** - ஸனகாதி முனிவர்களால் போற்றப்பட்டவன். 344. **பதி:** - உலகத்துக்கு நிமித்தோபாதான காரணன், ஈசுவரன். 345. **பஞ்சத்வநிர்முக்த:** - அழிவற்றவன். 346. **பஞ்சக்ருத்ய பராயண:** - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என் னும் ஐந்தொழில் புரிபவன்.

(50) 347. **பஞ்சயக்ஞப்ரிய:** - பிரம்மயக்ஞம், தேவயக்ஞம், பித்ருயக்ஞம், மனுஷ்யயக்ஞம், பூதயக்கும் என்னும் ஐவகை வேள்விகளில் அன்புள்ளவன். 348. **பஞ்சப்ராணுதி பதி:** - ஐவகைப் பிராணன்களுக்குப் பதியானவன். 349. **அவ்யய:** - அழிவற்றவன். 350. **பஞ்சபூதப்ரபு:** - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெ ரும் பூதங்களுக்கும் எஜமான். 351. **பஞ்சபூஜா ஸந்துஷ்டமானஸ:** - சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் இவற்றேடு கூடிய பூஜையில் பிரியமுள்ளவன், (அல்லது) ஐந்து ஆவரண பூஜையில் பிரியமுள்ளவன்.

(51) 352. **விக்னேச்வர:** கார்யங்களேச் செய்யக் கூடாமல் தடை செய்யும் விஊகளே ஏற்கிறவன். 353. **விக்னஹந்தா** - அவ்விஊகளே அழிப்பவன். 354. **சக்திபாணி:** - சக்தி என்னும் ஆயுதத்தைக் கைக்கொண்டவன். 355. **சரோத்பவ:** - ஜீவராசியை உண்டுபண்ணினவன். நாணல் காட்டில் உண்டான குமாரன் உருவன். 356. **கூட:** - மாயையிஞல் மறைக்கப்பட்டவன். (ரஹஸ்யமானவன்) 357. **குஹ்யதம:** - மிகவும் ரஹஸ்யமானவன். 358. **கோப்ய:** -- வேதரூபன் ஆனதால் பக்குவமற்ற ஆன்மாக்களுக்கு புலப்படத்தகாதவன். இதனுல் ஆத்மார்த்த பூஜை லிங்கத்தை பிறருக்குக் காட்டுதல் கூடாது எனவும், கோபிகா ஸ்த்ரீகளுக்கு நன்மையருள்பவன் எனவும் பொருள்பட இடமுண்டு. 359. **கோரக்ஷீகணஸேவித:** - கோரக்ஷி என்கிற சித்தர்களிண் (அல்லது) கோபாலர்களின் கூட்டத்தால் வணங்கப்பட்டவன்.

(52) 360. **ஸுவ்ரத: -** அழகான நியமமுள்ளவன். (விரதங்களை அனுஷ்டிப்பவன்) 361. **ஸத்யஸங்கல்ப:** - மெய்யான எண்ணமுள்ளவன். (மெய்யையே கருதுபவன்). 362. **ஸ்வஸம்வேத்ய:** - தன்னைத் தானறிந்தவன். ஸ்வாதிஷ்டான சக்கரத்தில் போற்றப்படுகிறவன். இது காரணம் பற்றியே ஆறு ஆதாரஸ்தானங்களில் நிகழ்த்த ப்படும் அந்தர்யாக பூஜையைப் பின்பற்றி சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜருக்கு பாஹ்யத்தி லும் ஆறு கால பூஜைகளும் தேவமான ரீதியாக வருஷத்தில் ஆறு அபிஷேகங்க ளும் நடைபெறுகின்றன. இதில் ஸ்வாதிஷ்டான சக்ர பூஜைக்குச் சமமாக பகல் இரண்டாங்கால பூஜையும், தேவமான ரீதியான அபிஷேகத்தில் மாசிமாத அபிஷேக மும் கருதப்படுகிறது 363. **ஸுகாவஹ:** - ஸுகமாக இருப்பவன். 364. **யோககம்ய:** - யோகாப்யாஸத்தால் அடையத் தக்கவன். 365. **யோகநிஷ்ட:** - யோகநிஷ்டையோடு இருப்பவன். 366. **யோகாநந்த:** - யோகத்தில் பிரியமுள்ளவன். 367. **யுதிஷ்டிர** - போ ரில் புறங்காட்டாது நிற்பவன்.

(53) 368. **தத்வாவபோத:** - ஆகாயம் முதலிய தத்துவங்களைக் காண்பிக் கிறவன். 369. **தத்வேச:** - தத்துவங்களுக்கு எஜமானன். 370. **தத்வபாவ:** -தத்துவங் களாக இருப்பவன். 371. **தபோநிதி:** - தபஸ்ஸுக்கு இருப்பிடமானவன். 372. **அக்ஷர:** - அழிவற்றவன், எழுத்து வடிவன். 373. **த்ர்யக்ஷர**: - மூவெழுத்துள்ள ஓங்கார வடி வன். 374. **த்ர்யக்ஷ:** - முக்கண்ணன். 375. **பக்ஷபாதவிவர்ஜித:** - வேற்றுமையற்றவன், உண்மை கைக்கொண்டவன்.

(54) 376. **மாணிபத்ரார்ச்சித:** - குபேரனுக்குத் தோழனான மாணிபத்ரனால் பூஜிக் கப்பட்டவன். (இவனே குபேரனது ஆத்மபூஜா மூர்த்தியான ஸ்வர்ணாகர்ஷண பைரவரைச் சிதம்பர ஸபையில் எழுந்தருளப்பண்ணியவன்) 377. **மான்ய:** - கொண் டாடத் தகுந்தவன். 378. **மாயாவீ** - மாயையைக் கைக்கொண்டவன். 379. **மாந்த்ரிக:** - மந்திரம் கற்றவன். 380. **மஹான்** - பெரியவன். 381. **குடாரப்ருத்:** - குடார கோடாலி) ஆயுதம் தரித்தவன். 382. **குலாத்ரீச:** - மஹேந்திரம் முதலிய குலபர்வதங்களுக்கு அரசன். 383. **குஞ்சிதைக பதாம்புஜ:** - சிறிதே வளைத்துத்தூக்கிய திருவடித்தாமரை யான்.

(55) 384. **யக்ஷராட்:** - தலவகார உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள யக்ஷஸ்வரூபி, பரப்பிரம்மம், குபேர உருவன், அக்ஞாத வாஸத்தில் பாண்டவர்களுக்கு அனுக்ரஹம் புரிந்த யக்ஷ உருவன். 385. **யக்ஞபலத:** - வேள்வியின் பயனை அருள்பவன். 386. **யக்ஞமூர்த்தி:** - வேள்வியே உருவாகக் கொண்டவன். 387. **யசஸ்கர:** - புகழ் அளிப் பவன். 388. **ஸித்தேச** - திருமூலர், புசுண்டர் முதலிய ஸித்தர்களுக்குத் தலைவன். 389. **ஸித்திஜனக:** - ஸித்திகளை உண்டாக்கியவன். 390. ஸித்தாந்த: - முடிவுப் பொருள். 391. **ஸித்த வைபவ:** - அழிவற்ற மஹிமை உள்ளவன்.

(56) 392. **ரவிமண்டலமத்யஸ்த:** - ஸூரியபிம்ப நடுவில் விளங்குபவன். 393. **ரஜோகுணவிவர்ஜித:** - ராஜஸ குணத்தை அகற்றினவன். 394. **வன்ஹிமண்டல மத்யஸ்த:** - தீயின் நடுவில் உள்ளவன், மூலாதாரத்தில் விளங்குபவன். 395. **வர்ஷீ யான்** - வயது முதிர்ந்தவன், ஞானம் நிறைந்தவன். 396. **வருணேச்வர:** - வருணனு க்கு ஈச்வரன்.

(57) 397. **ஸோமமண்டலமத்யஸ்த:** - சந்திரபிம்ப நடுவில் விளங்குபவன். 398. **ஸோம:** - உமையோடு கூடினவன், சந்திரனுருவன். 399. **ஸௌம்ய:** - ஸோமம் என்கிற வேள்வியில் வரிக்கப்பட்டவன், மனோக்ஞன். 400. **ஸுஹ்ருத்** - நல்ல எண்ணம் உள்ளவன், அழகான ஹ்ருதயன். 401. **வர:** - சிரேஷ்டன். (காத்யாயன முனிவரின் ஆச்ரமம் சென்று (திருவீழிமிழலை) மாப்பிள்ளை உருவங் கொண்டவன். மாப்பிள்ளை ஸ்வாமி (குறிப்பு). 402. **தக்ஷிணாக்னி:** - வேள்விச்சாலையில் தென்புற முள்ள தீ வடிவன். 403. **கார்ஹபத்ய:** - வேள்விச் சாலை மேற்கிலுள்ள அக்னி வடிவன். 404. **தமன:** - தண்டிப்பவன். 405. **தானவாந்தக:** - அரக்கர்களைக் கொல்லு பவன்.

(58) 406. **சதுர்வக்த்ர:** - நான்கு முகமுள்ளவன், ஈசான வடிவம் நீக்கி மற்ற நான்கு பிரம்ம வடிவன். படைக்கிறவனின் உருவன். 407. **சக்ரதர:** - ஸுதர்சனம் என்னும் சக்கரம் ஏந்தினவன். (பின் அச்சக்கரத்தைத் திருமாலுக்கு அளித்துத் தரிக்கும்படிச் செய்தவன். இச் சக்கரம் ஜலந்தரனை (அழித்ததாகும்) 408. பஞ்சவக்த்ர: - ஐந்து முகமுள்ளவன், ஈசான மூர்த்தி. அவ்விதம் ஸ்ரீ நடராஜர் உருவபேதங்களும் உள. அழித்ததாகும்) 409. **பரந்தப:** - சத்துருக்களைக் தபிக்கப் பண்ணுபவன், அப்பெயரன். 410. **விச்வஸ்யாயதன:** - உலகுக்கு இடமானவன். 411. **வர்ய:** - வரிக்கத் தகுந்தவன் 412. **வந்தாரு ஜனவத்ஸல:** - வணங்கினவர்களிடம் அபிமானம் கொண்ட வன்.

(59) 413. **காயத்ரீவல்லப:** - த்விஜர்களால் முக்காலமும் போற்றப்படும் காயத்திரிக்குப் பதியானவன். 414. **கார்க்ய** - கர்க கோத்திரத்தில் உண்டானவன், அப்பெயருள்ளவன். 415. **காயகானுக்ரஹோன்முக:** - பாடுகிறவனிடம் அருள் நோக் குள்ளவன். 416. **அனந்தரூப:** - எண்ணற்ற உருவம் கொண்டவன். ஸர்ப்பராஜன் உருவன். 417. **ஏகாத்மா** - உள்ளும் புறம்பும் வேற்றுமையற்ற ஒன்றானவன், ஜீவ ப்ருஹ்மைக்யம். 418. **ஸ்வஸ்தரு:** - பாரிஜாதம் முதலிய ஸ்வர்க்க விருக்ஷவடிவன். 419. **வ்யாஹ்ருதி:** - இது ஒரு மந்திரம். இதன் வடிவமானவன். 420. **ஸ்வதா** - இது அவ்யயபதம். பிதுருக்களுக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணும் மந்திரவடிவன், இதன் பொருளானவன்.

(60) 421. **ஸ்வாஹா** - இதுவும் அவ்யயபதம். தேவதைகளுக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணும் இந்த மந்திர வடிவன், இதன் பொருளானவன். 422. **அரூப:** - உருவம் அற்றவன். நிஷ்கள சொரூபம் (இது சிதம்பர ஸபையிலுள்ள ரஹஸ்யத்தைக் குறிக்கும்) 423. **வஸுமநா:** - அஷ்ட வஸுக்களிடங்களில் பிரியம் உள்ளவன். 424. **வடுக:** - இளமை பைரவ ரூபன், பைரவன். 425. **க்ஷேத்ரபாலக:** - க்ஷேத்ரங்களைக் காப்பாற்றுபவன். 426. **ச்ராவ்ய:** - கேட்கத் தகுந்தவன். 427. **சத்ருஹர:** - சத்துருக்களை அகற்றுபவன். 428. **சூலீ** - சூலம் என்ற ஆயுதம் தரித்தவன். 429. **ச்ருதி ஸ்ம்ருதி விதாயக:** - மறைகளில் கூறப்பட்டுள்ளவற்றை நடத்துபவன்.

(61) 430. **அப்ரமேய:** - எண்ண முடியாதவன், நீரில் கருதத்தகுந்தவன். 431. **அப்ரதிரத:** - எதிரி இல்லாதவன், தன்னைப்போன்ற ரதாதி படைகள் கொண்டவன ற்றவன். 432. **ப்ரத்யும்ந:** - அதிகமான பொருள்பலம் வாய்ந்தவன், மன்மதன். 433.

**ப்ரமதேச்வர:** - நந்திமுதலானவர்களுக்கு ஈசன். 434. **அனுத்தம:** - தன்னைக் காட்டிலும் வேறு உத்தமன் இல்லாதவன். 435. **அனுதாஸீன:** - சத்துருவையோ மித்திரனையோ ஏதோ ஒரு பக்ஷத்தை பின்பற்றினவன். 436. **முக்தித:** - மோக்ஷத்தையளிப்பவன் 437. **முதிதானன:** - ஸந்தோஷித்த முகங் கொண்டவன்.

(62) 438. **ஊர்த்வரேதா:** - பிரம்ஹரந்தரத்தில் மணி போல் கட்டப்பட்ட பும்ஸ்த்வத்தை உடையவன். 439. **ஊர்த்வபாத:** - காளியை அடக்கவேண்டி உயரத்தூக்கிய திருவடியன். மேல்வேர்களும் கீழ்கிளைகளும் உடைய பிரம்ஹவடிவான விருக்ஷரூபன. 440. **ப்ரௌடநர்த்தனலம்பட:** - கூத்தில் தானே ஸமர்த்தன் என்று கூறி அங்கங்களை அசைத்து ஆடுவதில் பிரியமுள்ளவன். 441. **மஹாமாய:** - பெரியமாயையைக் கொண்டவன். 442. **மஹாக்ராஸ:** - அதிகம் புசிப்பவன், குண்டோதரன் ரூபன். 443. **மஹாவீர்ய:** - அதிகம் வீர்யமுள்ளவன். 444. **மஹாபுஜ:** - பெரியகைகளுள்ளவன்.

(63) 445. **மஹானந்த:** - பேரானந்தமுள்ளவன். 446. **மஹாஸ்கந்த:** - பெருத்த தோளுடையான். 447. **மஹேந்த்ர:** - மஹேந்திரன் உருக்கொண்டவன். 448. **மஹஸாம்நிதி:** - ஒளிகளுக்கு இருப்பிடம். 449. **ப்ராஜிஷ்ணு:** - எப்போதும் விளங்குபவன். 450. **பாவனுகம்ய:** - பாவனையால் அடையத்தகுந்தவன். 451. **ப்ராந்திஜ்ஞான விநாசன:** - அஜ்ஞானத்தைப் போக்கடிப்பவன்.

(64) 452. **மஹர்தி**: - அதிகம் ஐச்வர்யமுள்ளவன். 453. **மஹிமாதார:** - மஹிமைக்கு ஆதாரமானவன். 454. **மஹாஸேன்குரு:** - ஷண்முகனுக்கு ஆசான் அல்லது ஷண்முகசீடன். 455. **மஹ:** - தேஜோரூபன். 456. **ஸர்வத்ருக்** - எல்லாவற்றையும் பார்க்கிறவன். 457. **ஸர்வப்ருத்** - எல்லாவற்றையும் தாங்குபவன் 458. **ஸர்க:** - படைக்கிறவன். 459. **ஸர்வஹ்ருத்கோச ஸம்ஸ்தித:** - எல்லா ஹ்ருதய கோசத்திலும் இருப்பவன்.

(65) 460. **தீர்கபிங்கஜூடாஜூட:** - நீண்ட பொன்னிறச் சடை முடியன். 461. **தீர்கபாஹு:** - நீண்ட தோளுடையான் 462. **திகம்பர:** - திசைகளை உடையாகக் கொண்டவன், ஆடை இல்லான். 463. **ஸம்யத்வாம:** - மங்களம் கொண்டவன். போரில் வலியன் பொருள்களை ஸ்த்ரீகளை நியமித்தவன். 464. **ஸம்யமீந்த்ர:** - முனிச்ரேஷ்டன் 465. **ஸம்சயச்சித்** - ஸந்தேகத்தைத் தெளிவிப்பவன். 466. **ஸஹஸ்ரத்ருக்** - ஆயிரங் கண்ணன்.

(66) 467. **ஹேதுத்ருஷ்டாந்தநிர்முக்த:** - காரண உதாரண சூன்யன். 468. **ஹேது:** - உலகுக்கு நிமித்தோபாதான காரணன். 469. **ஹேரம்பஜன்மபூ:** - விநாயகனைப் படைத்தவன். 470. **ஹேலாவிநிர்மிதஜகத்** - சிரமமின்றி விளையாட்டாக உலகைப் படைத்தவன். 471. **ஹேமச்மச்ரு** - பொன்மீசையான. 472. **ஹிரண்மய:** - பொன்மயமானவன்.

(67) 473. **ஸக்ருத்விபாத:** - பதஞ்ஜலி வேண்டுகோளால் ஒரு தடவை விளங்கினவன். ஒரு தடவை தனது காந்தி ஸம்பத்தால் விளக்கம் பூண்ட ரவி

மதீத்யன். 474. **ஸம்வேத்தா** - நன்கு அறிந்தவன். 475. **ஸதஸத்கோடிவர்ஜித: -** ஒரு பொருளிலும் ஆதரவு அநாதரவு அற்றவன். 476. **ஸ்வாத்மஸ்த: -** ஸ்வாத்ம ரூபமாக, சிவரூபமாக இருப்பவன். 477. **ஸ்வாயுத:** - கெட்டுப்போகாத ஆயுதம் உள்ளவன். 478. **ஸ்வாமீ** - எப்போதும் எல்லோராலும் போற்றப்படுகிறவன். 479. **ஸ்வாநன்ய:** - தன்னைக்காட்டிலும் வேறு இல்லாதவன், சொல்லுருவன், சொல்லே பரமனென்பான், வடமொழி இலக்கணத்தான். 480. **ஸ்வாம்சிதாகில:** - தனது அம்சத்தால் விளங்குகிற வைகளும், அங்கங்களுமான இதர தேவதைகளை உடையவன். (அல்லது) தனது அம்சத்தால விளங்குகிற இப் புவியில் உள்ள சிவ விஷ்ணுவாதி ஸகல க்ஷேத்திர ங்களிலும் ஆராதிக்கப்படுகின்ற மூர்த்திகளையுடையவன்.

(68) 481. **ராதி:** - பொருள், தோழன், சுகம் இவைகளின் ரூபன். 482. **தாதி:** - ஈகை உள்ளவன், சுத்தன். 483. **சதுஷ்பாத:** - நான்கு கால்கள் உள்ளவன், நான்கு வேதங்களைக் கால்களாகக் கொண்டவன். 484. **ஸ்வாத்மபந்தஹர: -** ஆத்மபந்தத்தை (தடையை) போக்கடிப்பவன். 485. **ஸ்வபூ:** - தானே உண்டானவன், தன்னிடமிருந்து எல்லாவற்றையும் உண்டு பண்ணினவன். 486. **வசீ** - எல்லாவற்றையும் வசமாக்கின வன் இந்திரியங்களை ஜயித்தவன், துக்கமற்றவன். 487. **வரேண்ய:** - வரிக்கப்பட்ட வன், பூஜிக்கப்பட்டவன். 488. **வித்த:** - நீண்டவன், வீணையைத் தரித்தவன். வீணையைத் தரித்த நடராஜர் உருவம் சில்பத்தில் கூறப்படுகிறது. 489. **வஜ்ரப்ருத்** - வஜ்ராயுதம் கொண்டவன். 490. **வருணாத்மக:** - வருணனின் வடிவன்.

(69) 491. **சைதன்ய:** - ஆத்மரூபி. 492. **சித்சித்** - ஆத்மானந்தத்தால் மாயையை அகற்றினவன். 493. **அத்வைத:** - இரண்டில்லாதவன். 494. **சின்மாத்ர:** - ஞானரூபி. 495. **சித்ஸபாதிப:** - திருச்சிற்றம்பலமுடையான், ஈசன். 496. **பூமா** - அனேகன் விவரிக்கமுடியாதவன். 497. **பூதபதி:** - பூதங்களுக்குப் பதியானவன். 498. **பாவ்ய:** - நித்யனானபடியால் கருதத் தகுந்தவன். ஸாத்விகம் முதலிய பாவங்களை உண்டு பண்னினவன். 499. **பூர்புவோவ்யாஹ்ருதிப்ரிய:** - மூன்று உலகங்களைக் கூறுகிற மந்திரத்தில் பிரியமுள்ளவன்.

(70) 500. **வாச்யவாசக நிர்முக்த:** - பொருள், சொல் அற்றவன். 501. **வாகீச:** - பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்னும் நான்குவித வாக்குகளுக்கு ஈசன், ப்ருஹஸ் பதி ரூபன். 502. **வாககோசர:** - சொல்லுக்கு அப்பாலான். 503. **வேதாந்தக்ருத்** - வேத வேதாந்தங்களை வெளியாக்குகிறவன், பிரளயத்தில் அவைகளை அடக்கிக் கொண்ட வன். 504. **துர்யபாத:** - மூன்று அவஸ்தைகளுக்கு அப்பாலுள்ளவன். 505. **வைத்யுத:** - மின்னல் வடிவன். 506. **ஸுக்ருதோத்பவ:** - நற்காரிய பலத்தை உண்டு பண்ணு பவன்.

(71) 507. **அசுபக்ஷயக்ருத்** - அமங்களங்களைப் போக்கடிப்பவன். 508. **ஜ்யோதி:** - ஒளிரூபன். 509. **அநாகாச:** - ஆகாசம் முதலானவைகளுக்கு வேறுபட்டவன். ஸுவர்க் கத்தை விரும்பாதவன். 510. **அவிலேபக:** - மிகவும் மாயையால் உலகை மறைப்ப வன். 511. **ஆப்தகாம:** - எல்லாப் பொருள்களையுமடைந்தவன். 512. **அனுமந்தா** - பிராணிகளின் செய்கையை அனுமதித்தவன். 513. **ஆத்மா** - பரப்ரும்மம், ஸ்ரீ நடராஜர். 514. **அகாம:** - இச்சையற்றவன். 515. **அபின்ன:** - வேறுகாதவன், பேதிக்கப்படாதவன்.

